[10th February 1959

மாதம் 1-ம் தேதி முதல் 1958-ம் வருஷம் செம்டம்பர் மாதம் 30-ந்தேதி வரையில் ரூ.10,311 செலவு, வருவாய் ரூ.10,076. அதற்கு மேல் 7,764 ரூபாயும் வந்திருக்கிறது.

* 181 *Q*.—SRI A. GOVINDASAMY : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விழுப்புரம் தாலூகா வீராணம் விதைப் பண்ணைக்கு எவ்வளவு நிலம் குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது ?

(ஆ) நஞ்சை எவ்வளவு ? புஞ்சை எவ்வளவு ?

(இ) குத்தகைத் தொகை தனித்தனியே எவ்வளவு ?

(ஈ) இந்த விதைப் பண்ணையில் எத்தனை ,கிணறுகள் இருக்கின்றன ?

(உ) இதுவரை எவ்வளவு செலவாகியுள்ளது ? வருமானம் எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 42.03 acres.

(*b*) Wet lands 25.31 acres.

Dry lands 16.72 acres.

(*c*) Rs. 225 per acre for wet lands.

Rs. 175 per acre for dry lands.

(*d*) Two wells.

(*e*) Rs. 8,806.69 has so far been spent on the farm and a sum of Rs. 4,76.00 has been derived as income from the farm.

SRI A. GOVINDASAMY : ஸார், இந்த பாரத்திற்கு கொடுக்கப்பட்டுள்ள புஞ்சை நிலத்திற்கு அதிகமான குத்தகை கொடுத்திருப்பதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முதலில் போதிய அளவில் நிலம் வேண்டும் என்கின்ற அளவில் இந்த நிலங்களை எடுத்துக்கொண்டார்கள். இப்போது அவ்வளவு நிலங்கள் அவசியமில்லை என்று முடிவு செய்யப்பட்டு அதை திருப்பி கொடுத்துவிடுவது என்றும் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதோடு இப்போது ஸ்டான்டிங் கிராப்பில் 6,400 ரூபாய்க்கு வருவாய் இருக்கும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

SRI C. NATARAJAN : அரசாங்கம் விதைப் பண்ணைகளை எடுத்துக்கொள்ளும்போது பெரிய மிராசுதார்களிடமிருந்து வாங்கி விதைப் பண்ணைகளை நடத்துகிறார்கள். இதற்கு அதிகமான குத்தகையும் கொடுக்க கலெக்டர் முன் வருகிறார்கள். கூடிய சீக்கிரமாகவே நிலங்களுக்கு ஸீலிங் வரப்போவதால் பெரிய மிராசுதார்கள் இம்மாதிரியான வழியில் அதிகமான பணத்தை சர்க்காரிடமிருந்து பெற்றுவருகிறார்கள். ஆகவே இம்மாதிரியான நிலங்களை எடுக்கக்கூடாது என்று இந்திய அரசாங்கத்தினிடமிருந்து ஏதாவது உத்தரவு வந்திருக்கிறதா ? அப்படியானால் அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இம்மாதிரி விதைப். பண்ணைகளை நடத்தும்போது குறைந்தது ஐம்பது எக்கர்கள் தேவைப்படுகிறது. இவ்விதம் ஐம்பது எக்கர் நிலம் வாங்க வேண்டுமென்றால் அதை அதிகமாக நிலம் வைத்திருப்பவர்களிடமிருந்துதான் வாங்க முடியும். இதிலும் குத்தகைக்கு வாங்குவதை விட விலைக்கு வாங்கிவிடுவது மிகவும் நல்லது என்றும் கருதப்படுகிறது. இதைப்பற்றி மத்திய அரசாங்கத்திடமிருந்து ஒரு உத்தரவும் வரவில்லை. இந்த அரசாங்கம் தான் இம்மாதிரியான நிலங்களை அதிக விலை கொடுத்து வாங்க வேண்டிய அவசியம் இல்லை.

10th February 1959]

கூடிய சீக்கிரம் நிலச் சீர்திருத்த சட்டம் வரப்போவதால் அதிகமான அளவில் நிலங்கள் கிடைக்கும், அதில் விதைப் பண்ணைகளை நடத்துவதற்கு சௌகரியமாக இருக்கும் என்று அரசாங்கம் ஏற்கனவே முடிவு செய்திருக்கிறது.

* 182 *Q.*—Sri A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) செங்கற்பட்டு மாவட்ட சீமாவரம் சர்க்கார் விதை பண்ணைக்கு எவ்வளவு நிலம் குத்தகைக்கு எடுக்கப்பட்டது ?

(ஆ) எப்பொழுது குத்தகைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது ?

(இ) குத்தகைத் தொகை எவ்வளவு ?

(ஈ) நீர்ப்பாசன வசதியிருக்கிறதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) 33·50 acres.

(*b*) 1st March 1958.

(*c*) The lease amount has not yet been finalised.

(*d*) Yes.

Sri A. GOVINDASAMY : ஸார், இதில் குத்தகைய நிர்ணயம் செய்வதற்கு காலம் கடத்துவதின் ரகசியம் என்ன ? நீர்ப்பாசன வசதி இல்லாத இந்த நிலத்தை அவசர அவசரமாக எடுத்துக் கொண்டதன் காரணமென்ன ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : என்னிடம் இருக்கின்ற தகவலின்படி இந்த இடத்தில்தான் நீர்ப் பாசன வசதியிருக்கிறது. இதன் பேரில் குத்தகை நிர்ணயம் செய்ததில் கலக்டருடைய ரிப்போர்ட்டுக்கும் விவசாய இலாகா அதிகாரிகளுடைய ரிப்போர்ட்டுக்கும் அபிப்பிராய பேதம் இருப்பதால்தான் இது வரையிலும் குத்தகை நிர்ணயிக்கப்பட இல்லை. இதைப்பற்றி ஆலோசித்து பரிசீலனை செய்த பிறகு நிர்ணயிக்கப்படும்.

Sri T. R. RAMAMIRTHA THONDAMAN : இந்த விதைப் பண்ணைகளுக்கு எடுக்கக்கூடிய விதைகளை சிமிட்டி தரையில் வைத்து பாதுகாக்கப்படுவதால் சரியான விதத்தில் முளை வருதில்லை என்கின்ற புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஆகவே இதை நல்ல முறையில் பாதுகாக்கப்படுவதற்கு அரசாங்கம் வேண்டிய நடவடிக்கை எடுக்குமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : விதைகளை சரியான முறையில் பாதுகாக்கப்படுவதற்கு அரசாங்கம் எல்லா முயற்சிகளும் எடுத்து வருகின்றது.

Sri T. S. RAMASAMY PILLAI : குத்தகையை நிர்ணயம் செய்வது கலெக்டர் அவர்களா அல்லது விவசாய இலாகா அதிகாரிகளா ? சீமாவரம் பாரத்திலிருந்து எடுக்கப்பட்ட நிலத்திற்கு நிர்ணயித்திருக்கும் குத்தகையை அதிகப்படுத்தி தரவேண்டும் என்று அந்த நிலச் சொந்தக்காரரிடமிருந்து அரசாங்கத்திற்கு ஏதாவது மனுக்கள் வந்திருக்கிறதா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : சாதாரணமாக கலெக்டர் தான் இதை நிர்ணயிக்கிறார். இம்மாதிரி மனுக்கள் வந்ததாக தெரியவில்லை. இதில் கலெக்டர் அவர்கள் நிர்ணயித்திருப்பது அதிகமாக இருக்கிறது என்று நினைத்துத்தான் இதை பரிசீலனை செய்யவேண்டியிருக்கிறது. ஆகவேதான் இதில் தாமதம் ஏற்படுகின்றது.